உ
சிவமயம்

# திருநெல்லை

## ஆன்மீகத் திங்களிதழ்

ஜய – கார்த்திகை – 2014 – நவம்பர் இதழ் – 29

சிறப்பாசிரியர் :
சீர் வளர் சீர்
**மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்**

ஆசிரியர் குழு :
காப்பியக் கவிஞர் **நா. மீனவன்**
முனைவர். பேரா. **நா. வள்ளி**
பேரா. **நா. சுப்பிரமணியன்**

ஆலோசகர் :
பேரா. தமிழாகரர்.
**தெ. முருகசாமி**

பதிப்பாசிரியர் :
பேரா. **ம. கார்மேகம்**

வெளியீடு :
**கோவிலூர் மடாலயம்**
கோவிலூர் - 630 307.
மானகிரி (அஞ்சல்),
(வழி) காரைக்குடி
சிவகங்கை மாவட்டம்
போன் : 04565 - 236846

அச்சிட்டோர் :
**திருமகள் அச்சகம்**
"ஜெய செளந்தர்",
7G, ஜவஹர் தெரு, நியூ டவுன்
காரைக்குடி - 630 001.

### பொருளடக்கம்



தனி இதழ் ரூ **10.00**
ஆண்டுச் சந்தா ரூ **100.00**

உ
சிவமயம்

# இறை வணக்கம்

## திருநெல்லை துதி - செல்வி வாழ்க

பங்குனியான் கார்த்திகையான் பாற்கு டங்கள்
பலகண்டான் காவடிக்குள் இருந்து பார்ப்பான்
படைவீடு மூவிரண்டு படைத்த சாமி
பாவலர்க்குக் கதியான பழனிச் சாமி

கங்குலுக்குப் பகையான கதிர்மு கத்தான்
கவலைகளைப் போக்குகின்ற கந்த சாமி
கங்கையணி சிவனாரின் கண்ணில் தோன்றிக்
காவலுக்கு நிற்கின்ற கதிர்வேல் அன்னை

மங்கைதிரு நெல்லையவள் மகிழுமாறு
மடியமர்ந்து அருணகிரி பாடல் கேட்டு
மகிழ்ந்த தாய் அருணகிரி மலையை விட்டு
மாதவர்க்கே அருள்புரியும் மனத்தி னோடு

தெங்குபல திகழ்வன்னி வனத்தில் வந்தாள்
தென்னவனாம் செழியர்பிரான் வெற்றி வாளைத்
தேடிவரச் செய்தவனால் கோயில் பெற்றான்
திருப்பதியாய்த் தானேற்ற செல்வி வாழ்க




காப்பியக் கவிஞர் கவிமாமணி நற்றமிழ் நாவலர். நா. மீனவன்

# ஆசியுரை

### சீர் வளர் சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள்

தானம் செய்வதிலும் பலவிதமான முறைகளைக் கடைப்பிடிக்க வேண்டும். கொடுப்பவருக்கு, தான் கொடுக்கிறேன் என்ற உணர்வோ, அகங்காரமோ எள்ளளவும் தோன்றக்கூடாது. கொடுக்கின்ற காலத்திலே பெறுபவருடைய வறுமை நிலையையோ, இயலாமையையோசுட்டிக் காட்டி உதவக் கூடாது. கொடுக்கின்றவர் தனக்கு உதவும் வாய்ப்புக் கிடைத்ததற்கு மகிழ்கின்ற உணர்வு நிலையிலே இருக்க வேண்டுமே தவிர, மமதைநிலை கூடாது.

அதே போலப் பாத்திரம் அறிந்து இட வேண்டும். பெறுபவருடைய தேவைக்கேற்ப உதவுவது எப்பொழுதுமே நல்லது. நகரத்தாரிலே ஒரு சொல் வழக்கு உண்டு. அவசர ஆத்திரக் காலத்திலே உதவ வேண்டும் என்பார்கள். அன்றாட வாழ்க்கைத் தேவைகளை அவர்களே சம்பாதித்துப் பூர்த்தி செய்து கொள்ள வேண்டும். எதிர்பாராத சமயங்களிலே ஏற்படுகின்ற பற்றாக்குறையை நிதி மிகுந்தோர் கொடுத்து உதவலாமே தவிர, அன்றாட வாழ்க்கைக்குச் சம்பாதிக்க வழி காட்டலாம். பொருள் உதவக் கூடாது.

பசியால் துடிக்கின்றவர்களுக்கு உடனடியாக உதவ வேண்டும். அவர்களால் உழைக்க இயலும் என்றால் உழைப்பிற்கான வழிகளை, ஆதாரங்களைச் செய்து கொடுக்கலாம். தொடர்ந்து இனாமாக எதையும் தருவது அவர்களைச் சோம்பேறி ஆக்குமே தவிர நல்லவர்களாக ஆக்காது. உணவிற்கு மீனைக் கொடுப்பதை விட மீனைப்பிடிக்கக் கற்றுக் கொடுப்பது நன்மை அளிக்கும். அதேபோலத் தேவைக்கு அதிகமாகக் கொடுப்பது தற்காலிகமாக இன்பத்தை அளிக்குமே தவிர நெடுங்காலம் நல்ல பயன் தராது. சமயங்களில் பெற்றவர்களைத் தீய வழி நடக்கவும் தூண்டலாம். எனவே தேவையறிந்து உதவுவது நல்லது.

உணவு விஷயத்திலே விருந்தினர்களை உபசரிப்பதிலேயும் கவனம் தேவை. தேவைக்கு அதிகமாக வற்புறுத்தி உண்ணவைப்பது மிகவும் தவறு. அதனால் பொருளும் வீணாகும். உண்பவர்கள் சுகாதாரமும் கெடலாம்.

மகாபாரதத்திலே ஒரு நிகழ்ச்சி. தர்மர் ஒரு மகாயாகத்தை நடத்துகின்ற காலத்திலே பீமனை உணவுக் கூடத்தினை மேற்பார்வையிட நியமித்திருந்தார். முதல் நாள் அறுசுவை உண்டி அளிக்கப்பட்டது. நிறைய மனிதர்கள் பயன் பெற்றார்கள். பீமன் அனைவரையும் வற்புறுத்திச் சாப்பிடச் செய்தான். மறுநாள் கூட்டம் குறைந்தது. மூன்றாம் நாள் யாருமே உணவுக் கூடத்திற்கு வராத சூழ்நிலை ஏற்பட்டது. பீமனுக்கு எதுவும் புரியவில்லை. பீமன் கிருஷ்ணனிடம் சென்று வினவினான். கிருஷ்ணன் இதைப் பற்றி உண்மையைத் தெரிந்து கொள்ளப் பக்கத்திலிருக்கும் மலைக்குச் சென்று அங்குள்ள தர்மவானைச் சந்தித்துவா என்றான். அதே போல பீமன் குறிப்பிட்ட மலைக்குச் சென்றான். மலை உச்சியிலே தங்கக் குன்றுபோல் ஓர் உருவம் ஒளிவிட்டுக் கொண்டு இருந்தது. பீமன் இவர்தான் தர்மவான் என்று கருதி அவரை நோக்கி நடந்தான். நெருங்க நெருங்கச் சகிக்க முடியாத துர்நாற்றம் வீசியது. தர்மவானுடைய உதடுகள் கன்னங்கரேல் என்று இருந்தன. அவனுடைய வாயில் வீசிய துர்நாற்றம் அவனை நெருங்கவே முடியாத நிலையில் இருந்தது. பீமன் அவனைப் பார்த்து விளக்கம் கேட்க அவனோ நான் கோடானு கோடிப் பேர்களுக்கு அன்னதானம் அளித்ததில் என் உடல் தங்கம் போல் ஜொலித்தது. அவர்கள் விருப்பத்திற்கும், தேவைக்கும் மேலாக என்னுடைய மகிழ்ச்சிக்காக அவர்களை உணவருந்தச் செய்து அவர்களுக்கு உடல் நலக் கேடு ஏற்படக் காரணமாக இருந்தேன். அதனால் என்னுடைய வாய்ப்பகுதி கருப்பாகவும், என் வயிற்றிலிருந்து துர்நாற்றமும் வீசும் படியாகச் சபிக்கப்பட்டுவிட்டேன் என்று விளக்கினான்.

இந்தக் கதையில் உள்ளது போல் உதவியும், தானமும் தேவைப்படுகின்ற காலத்தில், தேவைக்கேற்ப அளவிலே நல்ல சிந்தையோடும், மகிழ்வான உணர்வோடும், அன்போடும், பணிவோடும் வழங்கப்பட வேண்டும். அதுவும் புண்ணிய, பாவ வியாபாரமாக இல்லாமல், தன்னிடம் இருப்பதைப் பரிமாறிக் கொள்கின்ற சிந்தனையோடு உதவிகளும், தானங்களும் செய்யப்பட வேண்டும்.

***சற்குருநாதன் துணை***

தவத்திரு குமார தேவர் அருளிய

# மகாராஜா துறவு (தொடர்ச்சி)

## நூல்

### இந்நூலின் முதல் வரலாறு

1. தருக்கிளர் நைமிச ஆரணி யத்தில்
தங்கிய முனிவர்கள் சூதன்
வரப்பணிந்து ஏத்திக் கதைகள்பற் பலவா
வகுத்துரைத் தனைமகா ராசன்
திருக்கதை எங்கட்கு உரைத்திலை அதுநீ
செப்புஎனச் சுருதியில் சொல்லும்
சுருக்கமில் காதை இதுஎனத் தொகுத்துத்
தோம்அறக் கேண்மின்என்று உரைக்கும்

மரங்கள் வளர்ந்துள்ள இடம் நைமிச வனம். ஒருகாலத்தில் அங்குத் தவம் செய்து கொண்டிருந்த முனிவர்கள் தம்முடைய தவச்சாலைக்குச் சூதமா முனிவர் வருவது கண்டு, அவரைப் போற்றிப் பணிந்து வணங்கினார்கள். எங்களுக்குப் பகவானைப் பற்றிய பலவிதமான வரலாறுகளைக்கூறினீர்கள். ஆயினும் மகாராசனுடைய உயர்ந்த கதையை எடுத்து உரைக்கவில்லை. அவற்றைக் கூறி அருள்வாயாக என்றனர். அச்சூத முனியும், இக்கதையானது வேதத்தில் சொல்லப்படும் விரிவான வரலாறு ஆகும். எனினும் உங்களுக்குச் சுருக்கமாகக் கூறுகின்றேன், முனிவர்களே கேட்பீராக என்று குற்றமில்லாத முறையில் சொல்லத் தொடங்கினார்.

### கருநாட தேசத்து அரசன் சிறப்பு

2. குழைத்ததண் சினைத்தேம் மாவின்ஒண் கனித்தேன்
குலவிய பலவின் நல்பலம்தேன்
தழைத்திடு கதலிப் பழம்உகுத் திடுதேன்
தாம்திரண்டு இலஞ்சியில் ததும்பி
விழுத்தகு வயலில் பாய்தர விளையும்
மிகுகரு நாடதே சந்தான்
இழைத்தநல் தவத்தால் உயிர்எலாம் புரந்து
அங்கிருந்து அரசாளும்ஓர் குரிசில்.

நல்ல குளிர்ச்சி பொருந்திய கிளைகளை உடைய இனிய மா மரத்தினது ஒளி மிக்க பழத்தில் இருந்து வடிகின்ற தேனும், ஒளி பொருந்திய பலாப் பழத்தில் இருந்து வடிகின்ற தேனும், செழிப்பு மிக்க வாழைக் கனியில் இருந்து வடிகின்ற தேனும் சேர்ந்து பெருகிக் குளத்தில் பாய்ந்து நிறைந்து வழிந்து சிறப்பு மிக்க வயல்களிலே பாய, அதனால் பயன் மிகப் பெற்ற கருநாட நாடு செய்த தவத்தாலே ஒப்பில்லாத வேந்தன் ஒருவன் உயிர்களை எல்லாம் காத்து அரசு செய்து வந்தான்.

3. மஞ்சுஅமர் இஞ்சிசூழ் மாபுரத்து இருந்து
எஞ்சல்இல் எண்திசை இறைவர் தாள்தொழத்
தஞ்சம்என்று அடைந்தவர் தம்மைக் காத்துஇகல்
வஞ்சகர்க் காய்மகா ராச மன்னனே.

மேகங்கள் தங்கி இருக்கும் கோட்டைகள் சூழ்ந்த மாபுரம் என்ற நகரத்தில் இருந்து, எண்திசை அரசர்களும் குறைவின்றி வந்து தன் பாதங்களை வணங்கி, நீயே துணை என்று தஞ்சம் அடைந்தவர்களின் துயர் நீக்கிக் காப்பாற்றி, பகை கொண்ட வஞ்சகர்களைக் காய்ந்து ஒடுக்கும் அவன் அரசர்க்கு அரசனாவான்.

4. தருநிழல் அரசு வைகும்
சதமகன் திருவின் மிக்கான்
உருவினில் மதனின் மிக்கான்
உலத்தினின் பலத்த தோளான்
செருவினில் அரிஏறு அன்னான்
தேனொடு ஞிமிறும் பாட
முருகுஉடைந்து ஒழுகும் தாரான்
மூவுலகம் அளிக்கும் வேலான்.

கற்பக மரத்தின் நிழலில் அரசனாக வீற்று இருக்கும் இந்திரனைக் காட்டிலும் செல்வத்தில் மிக்கவன். வடிவத்தில் மன்மதனை விட மேலானவன். திரண்ட கல்லைக் காட்டிலும் வலிய தோளுடையவன். பகைவரை வெல்கின்ற போரில் ஆண் சிங்கம் போன்றவன். வண்டுகள் பாடிட, மலர்கள் உடைந்து தேன் வடியும் மலர் மாலையை அணிந்தவன். மூவுலகங்களையும் காக்கின்ற வேலை உடையவன்.

5. அரசர்வந்து இடுதிரை அளக்கும் முன்றிலான்
முரசுகள் அனுதினம் முழுங்கும் மன்றலான்
கரைபொரு திரைஎறி கடல்அம் தானையான்
அருவரை மார்பினான் யாளி மொய்ம்பினான்.

வேற்றரசர்கள் வந்து திறை அளக்கும் முற்றத்தை உடையவன். தினந்தோறும் முரசு முழங்க மங்கல காரியங்கள் நடந்துகொண்டே இருக்கும் செல்வச் செழிப்பு மிக்கவன். கரை மோதி அலை எறியும் கடல் போன்ற படைகளை உடையவன். அரிய மலை போன்ற மார்பினன். யாளி போன்ற வலிமை உடையவன்.

6. அரசர்தம் முடிஉழுது அவிரும் தாளினான்
எரிதவழ் திகிரியை ஏந்தும் தோளினான்
மருவளர் வலியினை மாற்றும் வாளினான்
தருநிதிக் கொடையினான் தருக்கும் நாளினே.

சிற்றரசர் தம் முடிகள் பணிந்து கீறிய தழும்புடன் ஒளி விடும் பாதங்களை உடையவன். நெருப்பைப் போல ஒளிவிடும் சக்கரம் தாங்கும் தோள்களை உடையவன். பகைவர் வலிமையை மாற்றும் வாட்படையை உடையவன். கற்பகத் தருப் போலவும் கொடை அளப்பவன். இவ்வாறு அவன் இருக்கின்ற நாளிலே ;

7. கவரியோடு ஆல வட்டம்
காரிகை யார்கள் வீசப்
பவளவாய் அரம்பை அன்னார்
பாகடை உதவ முத்தத்
தவளவாள் நகையார் கீதம்
தனிநடம் செய்ய நின்று
குவலய மன்னர் போற்றக்
குரைகடல் தானை சூழ.

அழகிய மகளிர் கவரிகளையும், விசிறிகளையும் வீசினர். பவள வாயுடைய அரம்பை போன்ற மகளிர் பாக்கு வெற்றிலை கொடுத்தனர். வெண்ணிற முத்துக்களைப் போன்ற ஒளி பொருந்திய பற்களை உடைய மகளிர் இசையுடன் நடனம் செய்தனர். உலகத்துச்

சிற்றசர்கள் முன்னே நின்று துதித்தனர். ஒலிக்கும் கடல் போன்ற சேனைகள் சூழ்ந்து நின்றன.

8. இந்திரன் ஆல யம்போல்
இலங்கிய மண்ட பத்தில்
சுந்தர மிருக ராசன்
சுமந்தபூ அணையின் மீது
வந்துஇருந்து அவனி தன்னை
மனுநெறி முறையில் காத்தே
அந்தம்இல் போகம் துய்த்துஅங்கு
இருந்திடும் அரசர் கோமான்.

தேவர் தலைவனாகிய இந்திரனின் அரசவை போல ஒளி விடும் அரசவையில் அழகு பொருந்திய விலங்கினங்களுக்கு எல்லாம் அதிபதியான சிங்கம் சுமந்த பூவணை மீது தினமும் இருந்து தங்கி, இவ்வுலகை மனுமுறைப்படி ஆண்டு, முடிவில்லாத இன்பங்களை அனுபவித்து அரசர்களுக்கு அரசன் அந்நகரத்தில் இருந்து வந்தான்.

### அரசன் மகப்பேறு இன்றி வருந்துதல்

9. தூம்புடை பிறைஎ யிற்றுத்
துத்திஈ ராயி ரம்தோள்
பாம்பினால் பரிக்கல் உற்ற
பாரினைப் பரிக்கப் பின்னர்
மேம்படு புதல்வர் நம்தம்
வீறுடை வயிற்றில் இல்என்று
தேம்படு தெரியல் மார்பன்
சிந்தைஆ குலங்கள் உற்றான்.

நறுமணம் கமழ்கின்ற மாலை அணிந்த மார்புடைய அவ்வேந்தன், உள்ளே துளையுடைய பிறைமதி போன்ற நச்சுப் பற்களையும், புள்ளிகள் கொண்ட படத்தையும், ஈராயிரம் தோள்களையும் கொண்ட ஆதிசேடன் என்னும் பாம்பினால் தாங்கப் படும் இவ்வுலகை, நமக்குப் பின்னர் ஆட்சிபுரிய மேம்பட்ட புதல்வன் தனக்குப் பிறக்கவில்லையே என்று மனக்கவலை கொண்டான்.

10. கங்கையே முதலா மிக்க
கடவுள்மா நதியில் தோய்ந்தும்
பங்கயாச னன்மால் திங்கள்
பவளவார் சடையான் தன்னை
அங்கையால் பூசை செய்தும்
அதிதிகட்கு அளித்தும் தீயில்
பொங்கும்ஆ குதிகள் ஈந்தும்
பூவலம் வந்தும் தேவர்.

அவ்வாறு கவலை கொண்ட மன்னவன், கங்கை முதலான புண்ணியப் பெருநதிகளில் நீராடியும், தாமரைமேல் இருக்கும் நான்முகனையும், திருமாலையும், நிலவை முடியில் அணிந்த சிவந்த நீண்ட சடை கொண்ட சிவனையும், அழகிய கைகளால் பூசை செய்தும் பெரியோர்களுக்கு வேண்டியன தந்தும், பொங்கி எரிகின்ற வேள்வித் தீயில் பலிகளைக் கொடுத்தும், இப்பூவுலகிலுள்ள புண்ணியப் பதிகளைச் சுற்றி வந்தும், தேவர்கள் வாழ்வதற்கான ;

11. ஆலயம் சாலை அக்கி
ராரம்நந் தனவ னங்கள்
கோலம்ஆர் இலஞ்சி கூபம்
குளம்பல செய்தும் ஈர்எட்டு
ஏலும்மா தானத் தோடே
இரணியம் முதல்ஈர் ஐந்து
சாலநல் தானம் ஈந்தும்
தருமம்எண் நான்கு செய்தும்.

கோவில்கள், இருமருங்கும் மரங்கள் அடர்ந்த சாலைகள், அந்தணர் இருக்கை, பூந்தோட்டங்கள், அழகு பொருந்திய குளங்கள், கிணறுகள், ஏரிகள் ஆகியவற்றை ஏற்படுத்தியும், சிறந்த பதினாறு தானங்களோடு, பொன் முதலான பத்துவகைத் தானங்களை விரும்பினவர்க்குக் கொடுத்து, முப்பத்திரண்டு அறங்களையும் செய்தான்.

## புதல்வர்ப்பேறு வாய்த்தமை

12. தவம்பல புரிந்தும் வேந்தன்
தனயனைப் பூத்துப் பின்னர்
பவந்தனைத் துடைத்தேன் மேலாம்
பரமநல் பதம்உண்டு என்றே
உவந்துசா தககன்மத் தோடு
ஒழிவுஅறு கருமம் எல்லாம்
நவம்தரச் செய்து நாமம்
நன்மகா ராசன் என்றே.

பலவிதமான தவங்களைச் செய்த மன்னன் அவற்றின் பயனால் புதல்வனைப் பெற்றான். அதன் பின்னர் நான் பிறவித் துயர் தீர்ந்தேன், இனி மேலான வீடுபேறும் எனக்கு உள்ளது என்று எண்ணி மகிழ்ந்து, அப்புதல்வனுக்கு ஜாதகம் கணித்தல், பெயர் சூட்டுதல், காதணி அணிவித்தல் முதலிய பிற சடங்குகளையும் புதுமையாகச் செய்து, மகாராசன் என்ற நல்லதொரு பெயரைச் சூட்டினான்.

## கல்வி கற்பித்தல்

13. வேத நீதியில் கூறி வியன்தர
ஓத எண்எண் கலையும் உணர்த்துவித்து
ஏதம் அற்ற குரவற்கு இரணியம்
போதும் என்னப் பொழிந்தனன் கொண்டல்போல்.

வேதநெறிப்படி பெயரிட்டு வளர்த்து அவனுக்குக் கற்கின்ற பருவம் வந்ததும், பெருமையுடன் அவன் பயில விரும்பிய அறுபத்து நான்கு கலைகளையும் கற்பித்தான். புதல்வன் அதனை ஓதி உணர்ந்த பின் குற்றம் இல்லாத ஆசிரியனுக்கு அவர் போதும் போதும் என்று சொல்லும்படி, பொன்னை மேகத்தைப் போலப் பொழிந்தான்.

*(தொடரும்...)*

## ஞான வாசிட்டக் கதைகளும் தத்துவமும் (தொடர்ச்சி)

**(சாது மெய்யப்ப ராமசுவாமி, கோவிலூர் மடாலயம்)**

**III/02/05 : லீலை – (மாயா மண்டப) கதை,** சென்ற இதழ்த் தொடர்ச்சி

**தத்துவப்பகுதி :** இக்கதைப் பாத்திரங்களில், பதுமலீலை, விதூரலீலை மற்றும் விதூரதன் ஆகியோரின் ஐயங்களுக்கு விளக்கமாகவும், சரசுவதிதேவியின் அருள் வாக்கு (உபதேசம்) வாயிலாகவும் மேலும், நூலாசிரியர் கூற்றாகவும் தத்துவம் பேசப்படுகிறது.

வெவ்வேறு கால அளவைகளும், தூரமும் உடைய கோள்களில் (அண்டங்கள்) பிறக்கும் அதே கணவன் - மனைவிக்கான முற்பிறப்பு, தற்பிறப்பு, அடுத்த பிறப்பு என மூன்றையும் ஒரே போதில் நாம் அறியுமாறும், அவ்வாறு அறியும் அறிவும், நமது இருப்பும் (வியவகாரிகம்) எந்த அளவு உண்மை எனவும் சரசுவதி தேவி காட்டுகிறார்.

### I கதைப் பாத்திரங்களின் ஐயங்களும் அவற்றிற்கான விளக்கமும்:

1. பதும அரசன் உண்மையா அல்லது விதூரதன் உண்மையா. முதலாமவன் இறந்து சில நாளில் இரண்டாமவன் 16 வயதுடையவனாகியது எவ்வாறு.

**விளக்கம் :** தற்பிறப்பு, அடுத்த பிறப்பு என்பன வெவ்வேறு வகை ஆக்கல் (சிருஷ்டி) ஆகும். இவை முற்பிறப்புக்களில் உண்டான ஆழ்பதிவு (வாசனை) களால் உண்டான மயக்கமே. காலம் என்பது தோற்றம் மட்டுமே. அது உண்மை அல்ல. அது வெவ்வேறு கோள்களில் மாறுபாடடைவதாகும். இதனை,

**"மதிநுதலாய் முதற்பிறப்பின் மயக்கம் சொன்னோம் மற்றிதுதான் மயக்கமாத்திரமதாகும்**
**உதிதரும் ஆகாய உடலாம் சென்மம் ஒளிபெறத்தோன்றியது என்றாள் உலகில் அன்னை"**

எனக் கூறுகிறார். வேறோர் இடத்தில், விதூரதன், தேவியிடம், "நான் பதுமனாக இறந்து இரண்டே நாளில், விதூரதனாக 70 ஆண்டுகள்

கழிந்தது எவ்வாறு" எனக் கேட்கிறான். அதற்கும் இது போன்ற விளக்கமே தரப்படுகிறது.

**"போயபவத்துடன் நீங்கி நாளொன்றாம் இவ்வுடலிற்**
**புக்கபின்னைச்**
**சேயஎழுபது வருடம் சென்றதாற் செய்ததெலாம்**
**தெளியாநின்றேன்"**

எனக் கேட்டதற்கு விளக்கமாக,

**"இறப்பென்னும் மாமூர்ச்சை எய்தியபின் அப்பொழுது**
**அவ்விடத்தில்தானே**
**பிறப்பென்னும் மாமோகம் பெரிதுண்டாம் விண்போலப்**
**பிறங்கித்தூய்தாம்**
**சிறப்புள்ள உள்மனதிற் செய்தொழிலாம் மயக்கமே**
**தெரியாநின்றது**
**உறத்துன்னும் எழுபதாண்டு உனக்ககன்ற தென்பதனை**
**உணர்ந்து நோக்காய் "**

எனத் தேவி கூறினார்,

2. பருவுடலுடன் இவ்வுலகத்து வாழ்பவர், நுண்ணுடலுடன் மட்டுமே பிற கோள்களுக்குச் செல்லமுடியுமானால், அத்தகைய நிலையினைப்பெறுதல் எவ்வாறு ?

**விளக்கம் :** நமது பழம்பிறவி வினைகள், மற்றும் ஆழ்மனப்பதிவுகளால், நமக்கு இப்பிறப்பில் பருவுடல் தரப்பட்டுள்ளது. வினைகளும் ஆழ்மனப்பதிவுகளுமற்ற நிலையில் மட்டுமே நமக்கு வானில் பயணிக்கும் ஆற்றல் கிட்டும். இதனாலேயே, இப்பயணத் -திற்குப் பருவுடல் தடையாகும் எனப்படுகிறது. ஆனால் பயணித்தே ஆகவேண்டும் எனும் உறுதியுடையவருக்காக இரு வழிகள் உண்டு. (பாடல் 13,14 மற்றும் 36,39ல் இவை கூறப்பட்டுள்ளன.)

முதலாவதான வழியில், இந்த உலகமும், உலக அனுபவங்களும் பொய் என உணர்ந்து, மிகுந்த சாந்தத்தோடும், தூய்மையோடும் இருப்பவர், பிரம்ம ஒளிர்வு ( தற்பரம் - சுயஞ்சோதி) வேண்டியிருத்தல் வேண்டும். அது தெய்வத்தால் அருளப்பட

வேண்டும். இக்கதையில் சரசுவதி தேவி அருளுகிறார். (இருக்குமிடம் விட்டகலாது, சமாதிநிலையில், (ஞானதிருஷ்டியால்) மற்ற கோள்களைக் காண்பதை இது குறிப்பிடுகிறது. பதுமனை, 16 வயதுடைய விதூரதனாக, லீலை கண்டது இவ்வாறாகும்.)

இரண்டாவதான வழியில், பிரம்ம ஞானத்தை அனுபவ உயர்வாக்கி அதிலேயே தொடர்ந்து தோய்ந்திருப்பவர், வாசனை நீக்கம் பெறுகிறார். அவர் சீவன் முத்தர் எனப்படுவார். அவர், தேவைப்பட்டால், அவர்தம் பருவுடலை ஓரிடத்து விட்டு, தாம் அதன் சாயலுடைய துளைமட்டுமாகி, எங்கு வேண்டுமாயினும் நொடியில் சென்று வர இயலும். ( இவர் ஞான சாதகர் ஆவார். இவர் 'நான் உடல் இல்லை ' என உணர்பவர். இவருக்கு அது, இது என்பனவும் காணப்படு பொருள்களும் (திரிசியம்), விருப்பு வெறுப்பு போன்ற இரட்டைகளும் முக்காலத்தும் இல்லை. இவர் சிரவணம் (கேட்டல்) நல்லோர் கூட்டு, ஆனந்தம், கருணை, வைராக்கியம் ஆகியவற்றைக் கடைப்பிடித்து, 'நிர்விகற்ப சமாதி' அடைந்தவர். (ஞான நூல் கற்பதன் குறிக்கோள் இதுவே எனலாம்.) இக்கதையில், லீலை, தேவியோடு பயணித்தது இவ்வாறாகும்.)

3. வேற்றுக்கோளைச் சேர்ந்த மறையவர், மறுபிறப்பில் இவ்வுலகத்திற்கு (நம்புவி) வருதல் என்பது நடக்கக் கூடியதா ? அவ்வாறு மறுபிறப்புற்ற எனக்கு முற்பிறவி பற்றிய நினைவு வராமை ஏன் ?

**விளக்கம் :** இது படைப்பின் நியதியாகும். எம்போன்றே (கடவுளர் / தேவர்கள்) மட்டுமே இவ்வுண்மையை வேறுபாடு கருதாது ஒப்புவர். பருவுடலுடையோர் இதனை ஏற்கார். பழம் பிறவிகளின் நினைவுகளை மறக்குமாறும், ஆனால் அப்பிறவிகளின் ஆழ்மனப்பதிவு (வாசனை)களோடு தற்போது வாழுமாறும், பருவுடலினர் படைக்கப்பட்டுள்ளனர்.

4. விதூரத அரசவையினர் லீலையைக் காண இயலவில்லை. ஆனால் மறையவன் இல்லத்தோர் லீலையைக் கண்டு வணங்கினர். இவ்வேறுபாடு எதனால் ?

**விளக்கம் :** லீலை, மூன்று வானங்களும் கடந்து, விதூரனின் அரசவையைக் கண்டாலும், அப்போது அவள் தடைகளுக்கு ஆட்பட்ட (துவைதபாவனை) சவிகற்ப சமாதி நிலையில் இருந்தாள். அதன் பின்னர், அவள் துவைத பாவனை நீங்க உண்மையை மட்டுமே எண்ணுபவளாகி (சத்ய சங்கற்பம்) அகங்காரமற்று, ஞான வழியைப் பயிற்சி செய்து பிரம்ம உணர்வு (நிர்விகற்ப சமாதி நிலை) பெற்று, சாயல் மட்டுமாகிய தேவியுடன் பயணிக்கும் ஆற்றல் பெற்றாள். இவ்விரு நிலை களும் வேறுபட்டவை. இரண்டாம் நிலை மிக உயர்வானது)

5. பதும லீலையும் விதூரத லீலையும் (புதிய லீலை) ஒரே சாயலில் தோன்றியது ஏன் ?

**விளக்கம் :** பதும அரசன், லீலை மீது கொண்ட அன்பால் அவளை நீங்காதிருக்க விரும்பியவன். அவன், இறக்கும் தறுவாயிலும் இந்நினைவுடனேயே இறந்தான். ஆதலால் அவனது மறுபிறவியில் அதே சாயலில் மனைவி அமைந்தாள்.

6. சரசுவதி தேவியின் அருள்பெற்ற பதும லீலை, விண்ணில் பயணிக்க, மிகப்பல முயற்சிகள் செய்து, நுண்ணுடல் பெற்றாள். ஆனால் புதிய லீலை, பருவுடலுடன் விண்ணில் பயணிக்க இயன்றது எவ்வாறு ?

விளக்கம் : பதும லீலை, மோட்ச விரும்பி. அவள் நுண்ணுடல் விரும்புமாறு படைக்கப் பட்டவள். ஆனால் புதிய லீலை, உடலில் விருப்புற்றவள். ஆதலால் பருவுடலுடனேயே இருக்க வரம் கேட்டாள். அவரவர் விரும்பியதே அவர்களுக்குத் தரப்படுகிறது.

7. தேவியையே நேரில் காணும் பேறு பெற்ற விதூரதன், போரில் இறத்தல் கூடுமா ?

**விளக்கம் :** விதூரதனின் பகை அரசன், போரில் வெற்றி வேண்டி சரசுவதி தேவியை வழிபட்டான். விதூரதன் வீடுபேற்றில் விருப்பமுடையவன். இருவர் வேண்டியதும் அவ்வாறே நடந்தது.

## II சரசுவதி தேவியின் உபதேசமாகக் கூறப்பட்டுள்ள தத்துவங்கள்

ஆகாயம் மூவகைப்படும். முதலாவது, நீலவானம், இதுசடம், இதனைப் பூத ஆகாசம் எனலாம். இரண்டாவது சித் ஆகாசம். இதனை

**அல்லாது பணியென்பர் தற்பரத்தைக் காணாதோர்**
**அகிலமென்பர்"**

மற்றும்

**"நெடியபிறப்பு இறப்பென்று நினக்கில்லை மெய்ஞானம்**
**நினக்குருபம்**
**முடிவில்பதத்து இருக்கின்றாய் சகமெலாம் கண்டிருந்தும்**
**முழுதுங்காணாய்"**

எனும் உபதேசமும் தருகிறார்.

> **"நாசம் உற்பத்தி மூர்ச்சை நனாக்கனாச் சுழுத்தி எல்லாம்**
> **ஏசுறஒன் றினுள்ஒன்று இல்லையால் அதுஉண்டென்ன**
> **மாசுறு மயக்கமட்டே........"**

எனவும், கனவில் சிறிது நேரத்தில் நெடுங்காலம் க்ழிந்ததைக் காணுதல் போல, நனவில் தோன்றும் மயக்கம் இதுவாகும். (இதுவே மகா மயக்கமாகும்) எனவும் உறுதி செய்து, உலகு, பிரம்ம வடிவாய் இருப்பது இவ்வாறாகும் எனவும் உபதேசிக்கிறார்.

**III இனி, வசிட்டர் நமக்குக் கூறும் தத்துவங்களாவன :**

பலவற்றையும் தோன்றச் செய்யும் ஆற்றல் வாய்ந்த மாயையானது நம் மனம் மூலமாக நம்மை ஆட்கொண்டு, இடம், காலம், தூரம் ஆகியவற்றை நமக்குத் தோற்றுவிக்கிறது. நமக்கு அகங்காரம் தருகிறது. ஆனால், **"தனைமுதலாய்க் காண்கின்ற சகமெல்லாம் நீள் கனவாம்"** எனவும், **"செறிவாய்க் கனமாய்ச் சுத்தமாகிப் பிரம விண்ணே உண்டாம்"** எனவும் உறுதிப் படுத்துகிறார்.

தமக்கு ஒப்பான (வேதாந்தம் அறிந்த) மறையவனான வசிட்டனும் கூட ஆசையின் வயப்படலாம் என்பதன் மூலமாக, உடல் விழும் போதாவது ஆசையை விட்டுவிடவேண்டும் என ஆசிரியர் அறிவுறுத்துகிறார். பருவுடல் விடுத்து, நுண்ணுடல் பெற்ற ஒருவரது (இங்கு பதுமலீலை) உடல் எரிக்கப்படின், அவர் மீதமுள்ள வாழ்க்கையை, நுண்ணுடலுடன் மட்டுமே நடத்தவேண்டி வரும்.

ஆனால் கூடு விட்டுக்கூடு பாய்ந்த ஒருவர் (இங்கு பதுமன்), மறுபடி உயிர்பெற்று அவர்தம் பருஉடல் எழ அவரது உயிர்த்தடை நீங்கும் அருள்பெற வேண்டும்.

(பிற்குறிப்பு :நிர்விகற்ப சமாதி நிலை பற்றிக் கூறப்படும் சிறப்பு வேதாந்த தத்துவத்தில் மட்டுமே உண்டு. இங்கு ஆகாயம் எனக் கூறப்பட்டுள்ளதை நீலவானம் போன்று நினையாது, இடைவெளி எனப் பொருள் கொள்ள வேண்டும்.

நமக்குப் பருவுடல், நுண்ணுடல் ஆகியன உண்டு என்று சென்ற கதையில் (III/01/04) கூறப்பட்டது. ஆனால் நாம், நம்மைப் பருவுடலாக மட்டுமே காண்கிறோம். நம் நுண்ணுடலால் பெறத்தக்க அனுபவங்கள் பற்றி இங்குக் கூறப்பட்டுள்ளது.

மாயையே பிரமத்தின் மனமாகி, அனைத்தையும் ஆக்கியமை பற்றி முன்னர் (கதை III/ 01/04ல்) கூறப்பட்டது. ஆனால், மாயையின் ஆற்றல் எத்தகையது என இராகவரும், சுகரும கேட்டமைக்கு (I/01/01 மற்றும் I/02/02) விளக்கமாக அமைந்தது இக் கதை எனலாம்)

(தொடரும்.....)

# வலப்புறத் திருநெல்லை

தமிழாகரர் தெ. முருகசாமி, புதுச்சேரி.
(முன்னாள் முதல்வர், இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி)

கோவிலூர் ஆதீனப் புலவர், காப்பியக்கவிஞர் நா. மீனவர் அவர்கள் நல்ல மரபுக் கவிஞர், கோவிலூர் ஆதீனத் திருமடத்திற்குக் கிடைத்த ஞானத் தமிழ்க் கொடைச் சொத்து. அவர்களுடன் நான் மயிலத்தில். தமிழ்படித்த காலந்தொட்டே அவர்தம் கவிதை வீச்சை நன்கறிவேன். நான்மட்டும் அறிந்தேன் என்பதினும் மயிலம் தமிழ்க் கல்லூரியே அறிந்தது என்பதுவே பேருண்மை.

அவர்கள் தேவகோட்டைச் சைவச் செம்மல் சிவபூசை "மேனா" என அனைவராலும் அன்போடு அழைக்கப்பெறும் வள்ளல் சேவு. மெய்யப்ப செட்டியார் கல்வி அறக்கட்டளையில் படித்தவர்கள். மேனா அவர்கள் மயிலம் வருகிறார்கள் என்றால், கல்லூரி முதல்வராக இருந்த வீரசைவச் செம்மல் வணக்கத்திற்குரிய துரைசாமி ஐயர் அவர்கள் மீனவரை அழைத்துத்தான் வரவேற்புப் பாமாலை எழுதித்தரச் சொல்லிக் கல்லூரி வரவேற்புக் கவிதையாக வாசிப்பார்கள், வேறு பல சிறப்பு நிகழ்ச்சிகளிலும் செட்டிநாட்டுக் கவிதை விலாசத்தோடே மீனவர் தான் உலா வந்தார்.

அத்தகு கவிதை நட்பை 50 ஆண்டுக் காலமாகக் கண்டு களிக்கும் நான், அவர்கள் தற்போது கோவிலூர் ஆதீனத் திங்கள் இதழான திருநெல்லை அக்டோபர் இதழில் எழுதிய திருநெல்லை துதி என்ற பாடல்களைப் படித்து நெகிழ்ந்துபோனதை வாசகர்களோடு பகிர்ந்து கொள்கின்றேன். ஏனெனில், 26.10.2014 ல் திருப்பாதிரிப்புலியூரில் தெய்வக்குழந்தை எனும் தலைப்பில் என்னைப் பேசச் சொன்ன போது திருநெல்லையம்மை அரதன வல்லிக்குழந்தையாக வந்து கழனி காத்த கோவிலூர்ப் புராணக் கதையையே கூறினேன் என நினைக்கும் போது கவிஞரின் திருநெல்லை துதியைப் பார்த்ததும் இது திருநெல்லை திருவருள் என்றே எண்ணினேன். மேலும் இக்கவிதையில் பல்வேறு புதுமைகள் உள்ளதைக் கண்டும் அது பற்றி எழுதலானேன்.

நறுக்குத் தெறித்தாற்போல் நான்கு பாடல்கள். ஒரே தொடராகப் பாடப்பட்டுள்ளன. இவை தனித்தனியே நான்காகத் தெரிந்தாலும்

"குளகம் பல பாட்டு ஒருவினை கொள்ளும்" என்ற தண்டியலங்கார இலக்கணப்படிப் பாடல்கள் ஒவ்வொன்றும் அந்தந்தப் பாடல்களிலேயே முற்றுப் பெறாமல் நான்காம் பாடலில் முற்றுப்பெறு மாறுள்ளது. இப்படிக் குளகச் செய்யுளைப் பாடுவது தொடர் நிலையாகப் பாடும் காவியங்களின் ஊடே காணப்பட்டாலும் தனிநிலையில் துதியாகப் பாடுகையில் குளகமாக அமைவது அரிது. வல்லோராலேதான் இங்ஙனம் பாட இயலும் என்பதை மீனவர் தம்மையறியாமலே புலப்படுத்தியது அவர்தம் கவிதையியல் அனுபவத்தை உணருமாருள்ளது.

நான்கு பாடல்களும் நால்வகை முத்திரைப் பதிப்பாக உள்ளன. வன்னிவனம் எனப்படும் கோவிலூர், அழகிய தாமரை பூத்த தடாகம் உடைய பூஞ்சோலைச் சிறப்புடன் உள்ளதாக முதற்பாடல் தொடங்குகிறது.

"கமலமலர் மேலிருந்து கருஞ்சுரும்பர் இசைபொழியும்
காவிடையில் தென்றலினால் கவின்கொடிகள் தலையசைக்க"

இதில் தடாகம் இருப்பதாகக் கூறாவிட்டாலும் தாமரை மீது வண்டினங்கள் இசைபொழிகின்றன என்றதாலேயே நீர் நிலை சூழ்ந்தது கோவிலூர், என்ற குறிப்பைக் கவிதை அடையாளப்படுத்தியது. மழைபெய்வது போல வண்டுகள் இசை பொழிந்தனவாம். அந்த இசையைத் தென்றல் காற்று எங்கும் கொண்டு சென்று பரப்பும் தகவல் சாதனமாக வீசுகிறதாம். இந்த வீசும் தென்றலில் பூக்களால் அழகுறும் கவின் கொடிகள் தலையசைத்து நின்றனவாம்.

இஃதோர் இயற்கைக் காட்சி வருணனையேயானாலும் ஏதோ ஒன்றைக் கவிஞர் உணர்த்தும் குறிப்பாகவே உள்ளது. தடாகத்தைக் கூறாமல் கமலத்தைக் கூறியதால் கோவிலூர் என்பது திரு என்ற அடைமொழியில்லாமலேயே சிறப்புறும் ஊர் எனத் தெரிகிறது.

தாமரையின் மேலிருந்து வண்டுகள் ரீங்காரம் செய்கின்றன என்றது-கோவிலூரில் தங்கியுள்ள வேதாந்திகள் வேதாந்தம் பயில்கின்றார்கள் என்றதன் கருத்தை உணர்த்துகிறது.

சோலையில் புகுந்து வீசும் தென்றல் காற்று, சோலையில் பூக்கும் மலர் மணத்தைப் பிறர் நுகர எங்கும் வீசுவதோடு வண்டின் இசையை எங்குள்ளோரும் கேட்கச் செய்வதாகவும் உள்ளது. இக்குறிப்பால்

எங்குள்ளோரும் வந்து அண்டுதற்குறிய இடமாக உள்ளது கோவிலூர் எனத்தெரிகிறது.

இந்த ஈரடிகள் உணர்த்தும் உட்குறிப்பின் உண்மையை இன்று கோவிலூரைக் காண்பர் நன்குணர்வர். ஞான உபதேசமாக நடைபெறும் ஆன்மிகச் சொற்பொழிவுகள் அறாமலும் சனாதனப் பல்கலைக் கழகச் சிறப்பாலும் பல்வேறு கலைகள் வளர்ப்பாலும் நாச்சியப்ப சுவாமிகள் கலை அறிவியல் கல்லூரி நடப்பாலும் பற்பல இடங்களில் புகழ்பரவக் கேட்டறிந்த பலரும் வந்துபோகும் இடமாக உள்ளது கோவிலூரன்றோ!

இங்ஙனம் பொதுச் சிறப்பால் ஓங்கிய கோவிலூரின் தனிச் சிறப்பை உணர்த்தும் விதமாகக் கவிஞர்,

கடுந்தவம்செய் ஞானியர்தம் காவியுடை கண்டுசிவன்
கண்பார்க்க வாழ்கொற்ற வாளீசர் இடத்தின் - பாங்கர்,

எனப் பாடலின் பின் அடிகளைக் கூறுகிறார். முன்னர்க் கூறிய இயற்கைச் சூழலில் ஞானியர்கள் கடுந்தவம் புரிவதான சான்னித்தியம் உடைய இடமாகக் கோவிலூர் இருப்பதாகக் கவிஞர் காட்டுகிறார்.

அங்கு வாழும் தெய்வமான கொற்றவாளீசர் ஞானியர்களைக் காணாமல் அவர்களின் காவியுடைகளையே காண்கின்றாராம். ஏனெனில் ஞானவாசிட்டமாம் வேந்தாந்தம் பயில ஞானியர்கள் சென்றுவிட்டதால் அவர்கள் சிலருடன் நீராடி, நனைத்த காவி -யாடைகளைக் காய(உலற) வைத்துள்ள இடமாகவே உள்ளதைத் தான் இவன் காண்கின்றாராம். இங்ஙனம் கூறுவது புதுமையாக இருந்தாலும் கோவிலூரின் சிறப்பில் வேதாந்தக் கல்வியே முதலிடம் பெறுவதால் அதைப் பயில்வோரின் எண்ணிக்கையை அவ்வூர் முழுவதிலும் வேதாந்திகள் உலற வைத்துள்ள ஆடைகளின் எண்ணிக்கைகளைக் கொண்டே உணரலாம் என்பதையே கவிஞர் மிக நுட்பமாக உணர்த்தியது கோவிலூர்க்கான தனிச்சிறப்பாகும்.

வேதாந்தம் பயிலும் இடம் என்பதற்கேற்பவே கவிஞர் "கொற்றவாளீசர் இடத்தின் பாங்கர்" என்றார். இத்தொடருக்கு கொற்றவாளீசர் இடப்பாகத்தில் என்பதாகப் பொருள் கொள்ளக்கூடாது. கவிதைத் தலைப்பு-நெல்லையம்மனைப் பற்றியது என்பதால்

மாதொருபாகத்தின் கருத்தை எடுத்தியம்புவதாக ஈண்டுக் கருதக் கூடாது. ஏனெனில் அடுத்த பாடலில் மதுரை மீனாட்சியின் அம்சமாகவே திருநெல்லை உள்ளாள் எனப்படுவதால் மதுரையின் காட்சியைக் கோவிலூரில் பொருத்திப் பார்த்தால் தான் முன்பாட்டில் பாடிய, “கொற்றவாளீசர் இடத்தின் பாங்கர்” என்றது இடப்பக்கம் என்ற பொருள் தராது என்ற உண்மை உறுதிப்படும்.

மதுரையில் சொக்கேசனுக்கு வலப்புறமாக மீனாட்சி சந்நிதி கொண்டுள்ளாள், கோவிலூரிலும் கொற்றவாளீசரின் வலப்புறமே திருநெல்லை சந்நிதியுள்ளதால் இந்தக் கோவில் அமைப்பின் உண்மைப்பதிவேஅண்ணன் மீனவன் அவர்களின் திருவாக்கில் அமைந்துள்ளது. இஃதொரு திருவருள் குறிப்பன்றோ!

அங்கயற்கண்ணி உடனாய ஆலவாய் அண்ணல் என்பதே வழக்காகும். பெண்ணின் நல்லாளுடன் பெருந்தகை இருந்ததே என்பதும் உண்ணாமுலை உமையாளொடும் உடனாகிய ஒருவன் என்பதும் திருஞானசம்பந்தர் வாக்கு. ஆக அப்பனைக் கூறி அம்மையை உடனாகக் கூறுவதில்லை என்ற ஆன்றோர் வழக்கின்படியும் கவிஞர் திருநெல்லை உடனாய கொற்றவாளீசர் எனக் காட்டவே மதுரை மீனாளைத் திருநெல்லையுடன் தொடர்பு படுத்தியதால் முதற்பாடலில் கொற்றவாளீசர் வாழும் இடமான கோவிலூரில் என்பதைக் கருத்தாகக் கொள்ள வேண்டும்.

இக்கருத்து கோவிலூர்ப்புராணத்தில் மகாவித்துவான் மீனாட்சிசுந்தரம் பிள்ளை அவர்களின் கற்பனையோடு பொருந்தியதாகும். சிவனுக்கு எல்லாமே மலைதான். தங்குமிடம் கயிலாயமலை, பெண் எடுத்த வகையில் இமயனின் மகள் உமையவளின் வீடு மேருமலை. ஓய்வெடுக்கும் இடமோ வெள்ளிமலை. இப்படியாக இருக்கும் நிலையில் தென்திசையான பூலோகம் வந்தால் தங்குதற்குரிய இடம் ஒன்று வேண்டுமே எனக் கருதி, கோவிலூராம் இடத்தைக் குறிப்பதன்றிக் கொற்றவாளீசரின் இடப்பாகம் அன்றாம் எனலாம். ஆக கொற்றவாள்ஈசனுக்கு வலமும் பலமுமாக உள்ள திருநெல்லைத் திருத்தாள்களைக் காப்பாகப் பணிவோமாக என்ற காப்பியக் கவிஞரின் திருநெல்லை துதியின் மாண்பே மாண்பு எனப் போற்றல் இக்கட்டுரையின் கருதுகோளாம்.

# கோயிலூர்ப் புராணம் (தொடர்ச்சி)

## வேறு

நிருமலநிட் களநிருவி காரநிரஞ் சனநிரா மயநிர்த் தொந்தம்
மருவருநிட் பிரபஞ்ச நிராகார நிட்கிரிய வருநிட் காம
பொருவினித்த சுத்தபுத்த முத்தசச்சி தாநந்த புரண ரூப
பருவர(ல்)இ லாச்சருவ சத்தமுழு மையும்உயர்ந்த பரமான் மாவாய்33

அநந்தகலி யாணகுணம் நிறைந்தவனாய்ச் சிருட்டிமுதல் ஆற்று
வோனாய்க்
கனந்தருகங் காதரனாய்ச் சதுர்ப்புயனாய்ச் சந்திரசே கரனாய்
ஆன்றோர்
மனம்தருச டாதரனாய் வயங்குதிரி நேத்திரனாய் மணிகண் டன்னாய்த்
தனந்தனிய னாய்மழுமான் தரித்தவனாய் உமைஒருபால் தழீஇயி
னோனாய் 34

இருக்கும்ஒரு திரிபுவனே சனைமுகுர்த்தம் ஒன்றிஇதயம் எண்ணிப்
பாவம்
உருக்கும்அவன் திருவடியில் பிரியாத மனத்(து)உவகை முதிர்ந்து
துள்ளக்
கருக்கும்வினைத் துயர்ஒழியக் கண்ணீர்உற்(று) ஆநந்தக் கலப்பன்
ஆகித்
திருக்குமலம் அறத்துமிக்கும் சமிவனமான் மியம்எடுத்துச் செப்பல்
உற்றான் 35

மாதவத்தின் விளங்கும்இந்த சௌனகர்முன் முனிவர்காள் வம்மின்
நீர்இப்
போ(து)அவத்தை அறுத்(து)உயர்த்தும் சமிவனமான் மியம்கேட்கப்
புக்க தானும்
நீதவத்தை விளக்கும்அஃ(து) யான்விரித்துச் சொலப்புகுந்த நேயத்
தானும்
மோ(து)அவத்தை மூன்றும்ஒழித்(து) ஒளிஎளர்தந் நியர்ஆனோம்
உண்மை உண்மை 36

தே(டு)அரிய சமிவனத்தில் சருவபா வமும்நிவர்த்தி செய்(து)எல்
லார்க்கும்
நாடரிய தருமார்த்த காமமோக் கம்தருவான் நயந்து நாளும்
வீடரிய பரமசிவன் பிரசன்ன மாய்இருந்து விளங்க லாலே
கூடரிய அத்தலம்உள் கருதுநரும் எண்ணிஅவை கூடுவா ரால் 37

எவன்அரியும் அயனும் அடிமுடிதேடி அறிவுஅரியான் எல்லாம் ஆவான்
எவன்அகிலத் தொழில்களையும் புரிந்தும்ஒரு தொழிலும்இன்றி
இருக்கும் மூர்த்தி
எவன்அகண்ட சச்சிதா நந்தசொரு பப்பெருமான் எவன்மற்(று) அம்ம
அவன்ஒருநம் சமிவனமுப் புவனேசன் எனில்அவன்சீர் அறைவார்
யாரே 38

மந்தரம்மத் தாநெடிய வாசுகிநாண் ஆம்தாழி வாரி ஆகச்
சுந்தரமால் அயன்முதலோர் கடைபொழுது விடந்தோன்றிச் சுடுதல்
நோக்கி
அந்தரநா(டு) அழியாமல் உண்டுபுரந் தவரேஅவ் அமலர் அன்னார்
தந்தரமான் மியம்எடுத்துக் கூறுவதின் மூகையராம் தன்மை நன்மை
39

தரைஇரதம் ஆகஇரு கதிர்கள்கால் ஆகமறை தாம்மா ஆக
உரைபிரமன் சாரதியா வடமலைவில் லாஉரகம் ஒருநாண் ஆகப்
புரைஇல்கவுத் துவமார்பன் கணையாகச் சென்றுதிரி புரங்கள் வேவக்
கரைசிறுபுன் முறுவல்செய்தோன் எவன்அவன்முப் புவனேசன்
காண்மின் காண்மின் 40

ஆனாலும் மூவகைய பரிச்சேத சூனியமாய் அமரும் மூர்த்தி
ஆனாலும் மறைமுழங்கும் சமிவனமான் மியம்தெரிந்த மட்டும்
எங்கள்
கோனாலும் புகழ்வாத ராயணன்சொல் படிஉரைப்பேன் குறிக்கோள்
வீர்என்(று)
ஊனாலும் அபிமானம் இல்லாத சூதமுனி உரைக்கல் உற்றான். 41

***நைமிசப் படலம் நிறைவுற்றது***

## தலவிசேடப் படலம்

மான்ம ருட்டும் வரிவிழிப் பாரதி
கோன்ம றுப்பொலி மார்பன் குறித்திடு
பான்மை உற்ற பரமன் சமிவன
மேன்மை சற்றுவி ளம்புதும் கேண்மினோ 1

அன்ன ஊர்தியில் அத்தலத்(து) இடத்(து)
அன்ன மென்நடை யாங்கயி லாயமே
பன்னி தானம் அள(வு)இல உள்ளன
அன்ன வற்(று)ள் அதிகம் சமிவனம் 2

வீரத் தேபொலிவெல்மழு வாளிமான்
ஈரத் தேமலர் ஏயும் சமிவனம்
தூரத் தேயிருந்(து) எண்ணினும் தோம்எலாம்
தீரத்(து) ஏய்க்கும்ஐம் பாவமும் தீர்க்குமே 3

விண்உற் றார்க்கும் இடபச் சமிவனம்
கண்உற் றார்க்கும் கருதிவ சிக்குமன்
நண்உற் றார்க்கும் நவைப்பழி தீர்க்குமே
எண்உற் றார்க்கும் அறையவும் வேண்டுமோ 4

புலத்தின் மிக்கவர் போற்றிப் புகழ்வதாய்ப்
பலத்து மிக்க பவமுழு தும்தரு
வலத்து மிக்க மதுபுட் கரணியைத்
தலத்து மிக்க சமிவனம் உள்ளது 5

எண்இ லாதவி லங்கின(து) ஈட்டமும்
எண்இ லாத பறைவகி னங்களும்
எண்இ லாத தருக்களும் ஏய்வன
எண்இ லாத மகத்துவம் எய்த்(து)என 6

மீறும் அத்தலம் மேவும்பி ரான்முடிக்(கு)
ஏறு மாபுகழ் எண்ணி மகிழ்வபோல்
நாறு நெய்தல் நருமுண்லட் கங்களும்
ஊறும் நீர்த்தடத்(து) என்றும் ஒளிர்வன 7

ஆர்அ வாவும் அனையவ னத்(து) இடைக்
கார்அ வாவு களிமயில் ஆடுதோறும்
ஏர்அ வாவு சுவாசம் இயங்குகால்
ஊர்அ வாவும் உரகமுண்(டு) உய்யுமால் 8

ஐய ஈ(து)என்ன அற்புதம் ஆன் எலாம்
வையம் ஓம்ப மடியில் சுரந்தபால்
செய்ய கன்றோடும் தீப்புலிக் குட்டியை
உய்ய ஊட்டுவ ஊங்கொரு பால்அரோ 9

சீலம் மிக்கவர் தெய்வ மறைஎலாம்
ஓலம் இட்டும் உணரான் இணைஅடிப்
பால்அ மைத்திடு பத்தியர் ஆகிய
வால கில்லியர் மல்கி வாழ்த்துவார் 10

வீசு செந்தழல் வெய்யவ னில்பொலி
தேசு மிக்கவர் யாவையும் தேர்ந்தவர்
மாசு தீர்சந்நி யாசநல் வாழ்க்கையர்
மூசு கின்ற வளங்களும் மொய்க்குமால் 11

வேதவித்(து) இவர் என்ன விளங்குவார்
காது அவித்தை கழன்ற மனத்தினர்
போதவித்தக ராய்ப்பொலி அந்தணர்
தீ(து)அ வித்துச் சொறிவரோர் பால்எலாம் 12

உயர்ந்த சாதிய ரேனும் உயர்(வு)இலா(து)
உயர்ந்த சாதிய ரேனும் அரும்தவம்
நயந்(து)அ வாவி நவிற்றுமுன் நல்தவம்
வயந்த வாது வயங்குதல் முற்றுமே 13

கரிய கண்டன் கருணைக்(கு) அள(வு)இலான்
அரிய வேதம் அரற்றியும் ஓர்கிலான்
தெரிய மேவும் திருக்கயி லாயத்தும்
பிரியம் உற்றுப் பிறங்குவ(து) அத்தலம் 14

தூய சோதிசுடர்தென் கயிலையே
ஆய அந்தச் சமிவனம் தண்நுதல்
ஆய தானம் தவம்சிவ பூசனை
ஏய ஆற்றல் இலார்க்(கு)இலை என்றுமே 15

என்று பல்பவப் புண்ணிய நன்மையால்
சென்று மேவித் திரிபுவ நேசரை
ஒன்றும் அன்பின் உறத்தொழு வாருக்குக்
கன்று வே(று) அறம் கைக்கொளல் வேண்டுமோ 16

சச்சி தாநந்த பூரண சம்புவாம்
செச்சை மேனித் திரிபுவ னேசனை
இச்சை யாலொரு கால்எதிர்ந்(து) ஏத்துவார்
முச்ச கம்புகழ் முத்தர்ஆ வர்அரோ 17

செய்ய மேனித் திரிபுவ னேசனை
ஐய கொற்றவாள் ஈசன் என்(று) ஆர்கலி
வையம் ஓதும்மற்(று) அப்பெயர் வந்தவாறு
எய்ய நீவிர் இயம்புதும் பின்னரே 18

திருகு தீர்க்கும் திரிபுவ னேசனை
இருக ணால்கண்(டு) இறைஞ்சுநர் ஆயிரம்
பெருகு கண்கொண்டு பெட்புற்(று) அரம்பையர்
உருகு நாடகம் காண்பர்பல் ஊழியே 19

சித்தம் மேயதிரிபுவ னேசனை
ஒத்த ஓர்முகத் தால்துதி ஓதுநர்
சுத்த நான்முகம் கொண்டு துகள்அறு
கத்தர் ஆகிச் சகம்படைப் பார்அரோ 20

தரைவி ளங்கு சமிவன நாதனுக்(கு)
உரைசி றந்த மணிபொன் உதவுவோர்
வரை(வு)இல் பொற்கலை வாள்செய் கவுத்துவம்
விரையப் பூண்டு புரவு விரும்புவார் 21

அன்ன மாதலத்(து) ஆமல கத்துணை
அன்னம் அந்தணர் ஆதியர்க்(கு) ஈவரேல்
அன்ன பேற்றில் அல(கு) இல்பல் நாள்அமு(து)
அன்னம் ஆக நுகர்ந்துவிண் ஆள்வரே 22

நெல்லை நாயகி நீடு திருமுனர்
எல்லை வீசுசெம் பொன்னின் இயன்றது
வல்ல மாமறை யோர்க்கு வழங்கிடின்
இல்லை பிங்கலன் ஆகா(து) இருந்திடல் 23

சான்றே மேன்மைச் சமிவனத் தேஅமர்ந்(து)
ஆன்ற தேகம் விடுத்த அறத்தினர்
தோன்ற மூன்(று)க ணால்புயம் சூழ்சடை
ஊன்ற நாதன் உருவம் அடைவரே 24

திருந்து வன்னி வனத்துச் சிவநிசி
இருந்து போற்றி இருகண் விழிப்பவர்
பொருந்து முக்கண் பொலிவுடை யார்களாய்
வருந்(து)உ றா(து)என்றும் வாழ்ந்து விழிப்பரே 25

ஒருக ணப்பொழு(து) அத்தலத்(து) உற்றவர்
பொருவி லாப்பெரும் பொன்உல கக்குடி
மருவி நாள்பல வாஞ்சித்(து) அரம்பையர்
ஒரு(வு)இல் போகம் உவந்(து)இருப் பார்அரோ 26

சம்பு மேயசமிவனத்(து) எய்திஒண்
வம்பு சால்மலர்த் தேன்தடம் மூழ்கிஉள்
நம்பு தெய்வ நறுந்திரு நீறுமெய்
பம்பு மாறு பளகறப் பூசியே 27

சென்னி ஆதி செழுங்கன் மணிபுனைந்து
துன்னி ஓர்எழுத்(து) ஐந்தும் உல(கு)உய்ய
மன்னி வாழும் மகாலிங்கம் போற்றுவோர்
மின்னி வாழ்ந்(து)உயர் வீடு கலப்பரே 28

நீறு கண்மணி நேயத் தொடுபுனைந்(து)
ஊறும் அன்பின் உஞற்றும் கருமமே
ஏறு மாபலம் நல்கும் இலைஎனில்
சீறு மாறு சிதையும் சிதையுமே 29

பொரு(வு)இல் நீற்றோ கண்மணி பூண்டிலார்
கருவில் பத்தி கருமம் பிரமம்என்(று)
ஒரு(வு)இல் வான்பெயர் உற்றமுக் காண்டத்தும்
வெரு(வு)இ லாஅதி காரம்இல் வீணரே 30

ஆத லால்அவ் இரண்டின் அலங்கரித்(து)
ஓதல் சால்சமி நீழல் ஒருவனைக்
காதல் மேவக் கசிந்(து)உபா சிப்பவர்
சாதல் தோன்றல்இ லாமுத்தர் சத்தியம் 31




**வேறு**

அருள்மலிவெண் ணீ(று)அணிந்து கண்மணிபூண்(டு)
ஐந்தெழுத்தும் அவாய்க் கணித்துத்
தெருள்பொலிபத்தி யிற்சிவஉ பாசனைசெய்
பவர்முத்தி சேர்வர் என்று
பொருள்விரவு பெரியசா பாலஉப
நிடதம்நன்கு புகலா நிற்கும்
மருள்அகல்கா வாக்கின்இருத்(து) இரவுபநி
டதமும்இதே வகுத்துக் கூறும் 32

உரைஅதர் வச்சிரோஉபநி டத்துமிக்
கரைஅகல் உண்மையே கரையும் ஈதுதேர்ந்(து)
அரைஇர(வு) ஆடுவோன் அடிஅ டைந்திடாப்
புரையருக்(கு) ஒழியுமோ புன்ப வத்துயர் 33

அறம்மலி சமிவனத்(து) அள(வு)இல் மான்மியம்
திறம்மலி தரஎவர் செப்ப வல்லவர்
நிறம்மலி செஞ்சடை நிமலன் சேவடிக்(கு)
உறமலி பத்தியால் உயர்ந்த அந்தணீர் 34

**தலவிசேடப் படலம் நிறைவுற்றது**

*தொடரும்....*

# மடாலய நிகழ்வுகள்

23.10.2014 அன்று சிதம்பரம் பொன்னம்பல சுவாமிகள் குருபூசை நிகழ்ந்தது.

25.10.2014 அன்று இலக்கியப் பூங்கா நிகழ்ச்சி சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலையில் நடைபெற்றது. காப்பியக் கவிஞர் நா. மீனவன் அனைவரையும் வரவேற்றார். தேவகோட்டை ஸ்ரீ சேவுகன் அண்ணாமலை கல்லூரியின் முன்னாள் தமிழ்ப் பேராசிரியர் டாக்டர் சபா. அருணாசலம் குங்குலியக் கலய நாயனார் என்னும் தலைப்பில் சொற்பொழிவாற்றினார். நற்கதை நம்பி டாக்டர் அய்க்கண், நீ. இராமச்சந்திரன், பேராசிரியர் நாகநாதன், புலவர் முத்து சண்முகம், திரு. சேவுகன் உள்ளிட்ட பலர் கலந்து கொண்டனர். நிறைவாக ம. கார்மேகம் நன்றி கூறினார்.

30.10.2014 அன்று சொர்ணநாதபுரம் பழனியப்ப ஐயா குருபூசையும் 9.11.2014 அன்று கண்டனூர் சிதம்பர சுவாமிகள் குருபூசையும், 10.11.2014 அன்று சின்ன அழகப்ப ஐயா குருபூசையும் 15.11.2014 அன்று கீழப்பூங்குடி நாராயண சுவாமிகள் குருபூசையும் சிறப்பாக நடைபெற்றன.

15.11.2014 அன்று சீர்வளர்சீர் மெய்யப்ப ஞான தேசிக சுவாமிகள் முன்னிலையில் குழந்தைகள் தின விழா நடைபெற்றது. முற்பகல் நிகழ்ச்சியில் குழந்தைக் கவிஞர் திரு.பால. நடராசன், ஆசிரியை செல்வி. உமா ஆகியோர் பங்கேற்றுக் குழந்தைகளுக்குக் கதைகள் கூறியும் பாடல்கள் பாடியும் மகிழ்வை உண்டாக்கினர். பிற்பகலில் பல்வேறு போட்டிகளில் பங்கு கொண்டு வெற்றிபெற்ற குழந்தைகளுக்குப் பரிசுகள் வழங்கப் பெற்றன. ஸ்ரீலஸ்ரீ முத்துராமலிங்க ஆண்டவர் பிரைமரி மற்றும் தொடக்கப்பள்ளி மற்றும் கோவிலூர் ஆண்டவர் மெட்ரிகுலேசன் மேனிலைப்பள்ளியின் சார்பில் இவ்விழா கொண்டாடப் பெற்றது. விழாவில் ரோஜாவின் ராஜா பண்டித ஜவஹர்லால் நேருவைப் பற்றிக் கருத்துக்கள் எடுத்துரைக்கப் பெற்றன. விழாவில் இரண்டு பள்ளிகளையும் சார்ந்த முதல்வர்கள், ஆசிரியர்கள், அலுவலர்கள், மாணவச் செல்வங்கள், பேராசிரியர் திரு. வி. பாலசந்திரன், நாச்சியப்ப சுவாமிகள் பாலிடெக்னிக் கல்லூரியின் துணை முதல்வர் திரு. நடராசன் உள்ளிட்டோர் கலந்து கொண்டனர்.

**விளம்பரங்கள் வரவேற்கப்படுகின்றன**

| | |
|---|---|
| பின்அட்டை முழுப்பக்கம் கட்டணம் | ரூ. 1000/- |
| அட்டை உள்பக்கம் கட்டணம் | ரூ. 750/- |
| நூலின் உள்பக்கம் கட்டணம் | ரூ. 500/- |

**தொடர்புக்கு – பதிப்பாசிரியர் "திருநெல்லை"**

---

**ஆன்மீக அன்பர்களும் கோவிலூர் மடாலயத்தின் நிகழ்வுகளில் ஆர்வம் கொண்ட பக்தர்களும் திருநெல்லை அம்மன் பெயரில் வெளிவரும் ஆன்மீகத் திங்கள் இதழுக்குச் சந்தா செலுத்தி உறுப்பினராகுமாறு வேண்டுகிறோம்**

**– பதிப்பாசிரியர்**